# அருள்

அவனன்றி ஓரணுவும் அசையாது

11/70




வடதிருமுல்லைவாயில்
ஸ்ரீ வைஷ்ணவீ திருக்கோயில்






தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 5 ] சாதாரண கார்த்திகை (15 - 11 - 70) [கருணை 2

## அன்பார்ந்த வாசகர்களுக்கு

''அருள்'' பத்திரிகையின் வளர்ச்சியில் அக்கறை கொண்டுள்ள பல அன்பர்கள், அதற்கான பல ஆலோசனைகளை நமக்கு அவ்வப் போது எழுதியனுப்பி வருகிறார்கள். அவர்களுக்கெல்லாம் முதலில் நமது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அது மட்டும் அல்ல; அந்த ஆலோசனைகளை நம்மால் இயன்ற வரையில் செயல்படுத்துவதற்கு அவ்வப்போது முயன்றும் வருவோம் என்பதை, அந்த அன்பர்களுக்கு நாம் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறோம்.

அந்த முயற்சியின் ஓர் அம்சமாகவே, ''உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கு'' என்னும் ஒரு புதிய பகுதி இந்த இதழில் ஆரம்பமாகிறது. தம் பிள்ளைகள் இந்தப்பகுதியைத் தவறாமல் படித்துப் பயன்பெறுமாறு, பெற்றோர்கள் அவர்களை ஊக்குவிப்பார்களாக!

— ஆசிரியர்

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி: நிர்வாகி, ''அருள்''
4, தணிகாசலம் செட்டி தெரு, தியாகராயநகர், சென்னை-17,

# லக்ஷ்மீ ஸ்தோத்ரம்

1) மூவுலகும் இடரியற்றும்
அடலவுணர் உயிரொழிய
முனிவு கூர்ந்த

பூவையுறழ் திருமேனி
அருட்கடவுள் அகன்மார்பில்
பொலிந்து தோன்றித்

தேவருல கினும்விளங்கும்
புகழ்க்கொல்லா புரந்தினிது
சேர்ந்து வைகும்

பாவையிரு தாள்தொழுது
பழமறைதேர் குறுமுனிவன்
பழிச்சு கின்றான்.

2) கொழுதியிசை அளிமுரலும்
தாமரைமென் பொகுட்டிலுறை
கொள்கை போல

மழையுறழும் திருமேனி
மணிவண்ணன் இதயமலர்
வைகு மானே!

முழுதுலகும் இனிதீன்ற
அருட்கொம்பே! கரகமலம்
முகிழ்த்தெந் நாளும்

கழிபெருங்கா தலில்தொழுவோர்
வினைதீர அருள்கொழிக்கும்
கமலக் கண்ணாய்!

3) கமலைதிரு மறுமார்பன்
மனைக்கிழத்தி செழுங்கமலக்
கையாய் செய்ய

விமலைபசுங் கழைகுழைக்கும்
வேனிலான் தனையீன்ற
விந்தை தூய

அமுதகும்ப மலர்க்கரத்தாய்!
பாற்கடலுள் அவதரித்தோய்!
அன்பர் நெஞ்சத்

திமிரமகன் றிடவொளிரும்
செழுஞ்சுடரே! எனவணக்கம்
செய்வான் மன்னே!

4) மடற்கமல நறும்பொகுட்டில்
அரசிருக்கும் செந்துவர்வாய்
மயிலே! மற்றுன்
கடைக்கணருள் படைத்தன்றே
மணிவண்ணன் உலகமெலாம்
காவல் பூண்டான்
படைத்தனன்நான் முகக்கிழவன்
பசுங்குழவி மதிபுனைந்த
பரமன் தானும்
துடைத்தனன்நின் பெருஞ்சீர்த்தி
எம்மனோ ராலெடுத்துச்
சொல்லற் பாற்றோ!

5) மல்லல்நெடும் புவியனைத்தும்
பொதுநீக்கித் தனிபுரக்கும்
மன்னர் தாமும்
கல்வியினில் பேரறிவில்
கட்டழகில் நிகரில்லாக்
காட்சி யோரும்
வெல்படையில் பகைதுரந்து
வெஞ்சமரில் வாகைபுனை
வீரர் தாமும்
அல்லிமலர்ப் பொகுட்டுறையும்
அணியிழைநின் அருள்நோக்கம்
அடைந்து ளாரே!

6) செங்கமலப் பொலந்தாதில்
திகழ்ந்தொளிரும் எழில்மேனித்
திருவே வேலை
அங்கணுல கிருள்துரக்கும்
அலர்கதிராய் வெண்மதியாய்
அமரர்க் கூட்டும்
பொங்கழலாய் உலகளிக்கும்
பூங்கொடியே! நெடுங்கானில்
பொருப்பில் மண்ணில்
எங்குளைநீ அவணன்றோ
மல்லல்வளம் சிறந்தோங்கி
இருப்ப தம்மா!

7) என்றுதமிழ்க் குறுமுனிவன்
பன்னியொடும் இருநிலத்தில்
இறைஞ்ச லோடும்
நன்றுனது துதிமகிழ்ந்தோம்
நான்மறையோய் இத்துதியை
நவின்றோர் யாரும்

பொன்றலரும் பெரும்போகம்
நுகர்ந்திடுவர் ஈங்கிதனைப்
பொறித்த ஏடு
மன்றல்மனை அகத்திருப்பின்
வறுமைதரு தவ்வையவண்
மருவல் செய்யாள்!

[காசிக்காண்டம் என்னும் வட மொழி நூலைத் தமிழில் மொழி பெயர்த்தவர் மஹாகவி அதிவீர ராமபாண்டியர். அந்தக் காசிக் காண்டத்தில் வருகிறது இந்த லக்ஷ்மீ ஸ்தோத்திரம்.

அகஸ்தியரும் அவரது பத்னி யாகிய லோபா முத்ரா தேவி யாரும், கொல்லாபுரம் என்னும் ஊருக்குச் சென்றனர். அங்கு கோயில் கொண்டிருக்கும் திரு மகள்மீது அகஸ்தியர் இப்பாடல் களைப் பாடித் துதித்தார்.

உடனே திருமகள் அவர் எதிரே தோன்றி, "உன்னுடைய இந்த ஸ்தோத்ரத்தைக் கேட்டு நான் உளம் மகிழ்ந்தேன். இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்பவர்கள் யாராயிருந்தாலும், அவர்களுக்கெல்லாம் நான் மஹத்தான சுகபோகங்களை இடையறாது எப்போதும் தந்து கொண்டிருப்பேன். இந்த ஸ்தோத்திரத்தை வெறுமே ஏட்டில் எழுதி வீட்டில் வைத் திருந்தாலே, அந்தக் குடும்பத்தில் ஒருநாளும் வறுமை வரமாட் டாது" என்று வரம் அருளினள்.

ஆகையால், அன்பர்கள் இந்த ஸ்தோத்திரத்திலுள்ள ஏழு பாட்டுக்களையும் நன்கு மனப் பாடம் செய்து வைத்துக் கொண்டு, அதை நாள்தோறும் பக்திசிரத்தையோடு பாராயணம் செய்து வரவேண்டும். அப்படிச் செய்து வந்தால், அவர்களுடைய வாழ்விலே செல்வம் கொழிக்கும். மனத்திலே மகிழ்ச்சி பொங்கும். உள்ளத்திலே ஊக்கம் பிறக்கும். தொட்டகாரியங்கள் எல்லாம் வெற்றியாக முடியும். குடும்பத் திலே மனைவி மக்களும், மற்றைய சுற்றத்தினரும் துணைவர்களும், மிகவும் நலமாக வாழ்வார்கள்.

பாராயணம் செய்யமுடியாத வர்கள், இந்த ஸ்தோத்திரத்தை ஒரு சிறிய நோட்டுப் புஸ்தகத் தில் எழுதி, அந்தப் புஸ்த கத்தையே திருமகளின் வடிவ மாகக் கருதி, நாள்தோறும் அதற்குச் சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம், கற்பூர ஆரத்தி ஆகிய உபசாரங் களைச் செய்து பக்தி சிரத்தை யோடு வழிபட்டு வரவேண்டும். அப்படி வழிபட்டால், பாரா யணம் செய்பவர்களுக்குக் கிடைக்கும் நற்பலன்கள் யாவும் இவர்களுக்கும் கிடைக்கும்.

திருமகளை ஸ்ரீமந்நாராயணரது திருமார்பில் உறைந்திருப்ப வளாக தியானித்து வழிபட வேண்டும். அவரை விட்டுப் பிரித்து, இவளைமட்டும் தனியே வழிபடக்கூடாது.

—ஆசிரியர்.]

# வடதிருமுல்லைவாயில் ஸ்ரீ வைஷ்ணவீ கோயில்

வேலவன்

சென்னையிலிருந்து இருபது கிலோ மீட்டர் தொலைவிலே, அம்பத்தூருக்கும் ஆவடிக்கும் இடையிலே, திருமுல்லைவாயில் என்னும் ஒரு சிறிய ஊர் இருக்கிறது. தேவார அடங்கன் முறையில், இவ்வூர் வடதிருமுல்லைவாயில் என்னும் பெயரால் குறிப்பிடப்பட்டிருக்கும்.

இவ்வூரிலே, மிக மிகப் பழமையான ஒரு சிவன்கோயிலும், மிகமிகப் புதுமையான ஓர் அம்பிகை கோயிலும் இருக்கின்றன. சுந்தரமூர்த்தி நாயனர், அருணகிரிநாதர், இராமலிங்க ஸ்வாமிகள் போன்ற திருவருட்செல்வர்களால் பாடல் பெற்றது சிவன் கோவில். இன்று அருட் பொலிவில் நாளுக்கு நாள் வளர்ந்தோங்கி வருவது அம்பிகையின் கோயில்.

இந்த அம்பிகையின் திருநாமம் ஸ்ரீவைஷ்ணவீதேவி. இவள் எவ்வாறு அங்கு கோயில் கொண்டு அமரலானுள் என்பது ஒரு சுவையான வரலாறு.

இந்திய அரசியல் வானிலே, தமிழகம் தந்த ஒரு தனிப் பெருஞ் சுடராக விளங்கியவர் ஸ்ரீமான் ஸ்ரீநிவாச அய்யங்கார் அவர்கள். அவரது புதல்வர் பார்த்தசாரதி சென்னையில் ஒரு புகழ் பெற்ற வழக்கறிஞராகவும், தொழில் மேதையாகவும் விளங்கியவர். அவர்தான் ஸ்ரீவைஷ்ணவீ தேவியின் திருக்கோயிலை நிறுவி, அதனை மிகவும் சிறப்பாகப் பரிபாலித்து வருபவர்.

ஸ்ரீபார்த்தசாரதியவர்கள், மயிலாப்பூரில் உள்ள தமது பெரிய பங்களாவிலே வாழ்ந்து கொண்டிருந்த காலம் அது. பழமையான வெண்கலச் சிலைகளைச் சேகரிப்பதில், அவர் மிகவும் ஆர்வம் படைத்தவர். 1946 ஆக்டோபர் மாதத்தில், தீபாவளிக்கு மூன்று நாட்கள் முன்னதாக,

அம்மாதிரிச் சிலைகளை விற்பனை செய்கிற ஒருவர் அவரது பங்களாவுக்கு வந்து, ''ஓர் அருமையான கற்சிலையை உமக்கு நான் அன்பளிப்பாகக் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று கூறினர்.

வைக்கோலால் சுற்றப்பட்டிருந்த அந்தச் சிலையை ஸ்ரீ பார்த்தசாரதியவர்கள் மறுநாள் காலையில் தான் பிரித்துப் பார்த்தார். பார்த்ததும், அதனுடைய அற்புதமான பேரெழில் அவரது உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. நான்கு கைகளோடு காட்சியளித்த அந்த அம்பாளின் சிலையில், கீழ்க்கரங்கள் இரண்டும் அபயவரத முத்திரைகளைத் தாங்கி நின்றன. ஆனுல், மேல் கரங்கள் இரண்டிலும் என்ன இருந்தன என்பது விளங்கவில்லை. அந்த தேவியின் ஸ்வரூபம் யாது என்பதும் தெரியவில்லை.

ஸ்ரீ பார்த்தசாரதியவர்கள் அந்தச் சிலையைப் பிரித்துப் பார்த்த சமயத்தில், ஸ்ரீ துரைசாமி ஐயர் என்னும் ஒரு பெரியவரும் அருகிலிருந்தார். துரைசாமி ஐயர் ஒரு புகழ் பெற்ற வழக்கறிஞராயிருந்து, பின்னர் அந்தத் துறையை விட்டு விட்டுத் தம்மை ஆத்மீகத் துறைக்கே அர்ப்பணித்துக் கொண்டவர். இப்போது அவரும் அவரது பத்தினியாரும் புதுச்சேரி அரவிந்தாசிரமத்தில் இருந்து வருகிறார்கள். பார்த்தசாரதியவர்கள் ஸ்ரீதுரைசாமி ஐயரைத் தம் தந்தை போலவும் குருவாகவும் கருதி மரியாதை செலுத்துவது வழக்கம்.

பார்த்தசாரதியவர்களுக்கு, அப்போதெல்லாம் விக்ரக ஆராதனையில் அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. இது ஸ்ரீ துரைசாமி ஐயருக்கும் தெரியும். எனவே அவர் பார்த்த சாரதியை நோக்கி, ''இந்தச் சிலையானது உன்னுடைய மற்ற சிலைகளைப் போல் வெறும் காட்சிப் பொருளாக வைக்கப்படுதற்கு உரியது அல்ல. இது நீ போற்றி வழிபடுதற்கு உரியது'' என்று வலியுறுத்திக் கூறினர். பெரியவரின் சொல்லைத்தட்டமாட்டாமல், அந்தத் தெய்வச் சிலையை ஒரு பொருத்தமான இடத்தில் ஸ்தாபித்து, அதனை பூஜித்துவர ஒப்புக் கொண்டார் பார்த்தசாரதி.

தம்முடைய பங்களா முன்புறத் தோட்டத்தில், ஒரு மகிழ மரத்தின் அடியில் மேடை அமைத்து, தீபாவளிக்கு முதல் நாளிரவு அதில் தேவியைப் பிரதிஷ்டை செய்தார் பார்த்தசாரதி. மறுநாள் (அதாவது, 23—10—1946) தீபாவளி அன்றைய தினம், ஸ்ரீ மஹாலக்ஷ்மி அஷ்டோத்தர சதநாமாவளியாலாகிய அர்ச்சனையோடு, ஒரு சிறிய அளவில் பூஜையும் நடைபெற்றது.

அதுமுதற் கொண்டு, வெள்ளிக்கிழமை தோறும் அங்கே பூஜை

கள் நடைபெற்று வரலாயின. அந்தப் பூஜைகளும் வாரத்துக்கு வாரம் விஸ்தாரமான முறையில் செய்யப்பட்டு வந்தன. விக்ரக ஆராதனையில் நம்பிக்கையில்லா தவராயிருந்த பார்த்தசாரதியும், நாளடைவில் அந்த வழிபாட்டிலே தீவிரமான ஆர்வமுடைய வராக மாறி வரலாயினுர். அம்பிகை தன்னுடைய பக்தர்களை எப்படி ஈர்த்துக் கொள்கிருள் என்பதை, அவர் அனுபவபூர்வ மாக உணரத் தொடங்கினுர்.

தமிழகத்திலே அண்மையில் வாழ்ந்திருந்த ஒரு சில மஹான் களுக்குள்ளே, ஸ்ரீ சச்சிதானந்த ஸ்வாமிகள் ஒருவர். இவரைத் திருப்புகழ் ஸ்ரீவள்ளிமலை ஸ்வாமிகள் என்றும் சொல்லுவார்கள். இவர் ஸ்ரீபார்த்தசாரதியவர்களின் வீட்டுக்கு அடிக்கடி வருவது வழக்கம். அந்த மஹாத்மா தான், மகிழ மரத்தடியில் எழுந்தருளியிருந்த அந்த அம்பிகையை ஸ்ரீவைஷ்ணவீதேவி யென்று அறிந்து சொன்னவர்.

காஷ்மீர் நாட்டிலே, ஜம்மு நகரிலிருந்து முப்பது மைல் தொலைவில், ஒரு மலையின் உச்சியிலுள்ள குகையிலே ஸ்ரீ வைஷ்ணவீதேவியின் கோயில் ஒன்று இருக்கிறது. ஸ்ரீசச்சிதானந்த ஸ்வாமிகள் அந்தக் கோயிலுக்குச் சென்று வந்தவர். அங்கு அவர் கண்ட வைஷ்ணவீ விக்ரகமும், இங்கே மகிழ மரத்தடியில் நின்றிருந்த விக்ரகமும் வெளித் தோற்றத்தில் வேறுபட்டாற் போல காணப்படினும், இரண்டிலும் குடிகொண்டிருந்த வஸ்து ஒன்றேதான் என்பதை, அவர் தம் தெய்விகப் பார்வையால் கண்டு சொன்னுர். அவர் சொன்னபடியே, அந்த மகிழடி அம்பிகையும் ஸ்ரீவைஷ்ணவீ தேவியென்னும் பெயராலேயே வழங்கப்படலாயினள்.

இது நடைபெற்ற ஒரு சில ஆண்டுகளில், ஸ்ரீபார்த்தசாரதி தம்முடைய மயிலாப்பூர் பங்களாவை விட்டு, திருமுல்லைவாயிலில் உள்ள தம்முடைய பாகோ பண்ணை யென்னும் பெரிய தோட்டத்திற்குக் குடியேறினுர். அப்போது ஸ்ரீவைஷ்ணவீதேவியையும் தம்முடன் எடுத்துச் சென்று, 1954 நவம்பர் 5ம் தேதியன்று, (அதாவது, தீபாவளிக்கு முந்தின நாள்) அந்த பாகோ பண்ணையிலேயே ஒரு சிறிய குடிலில் அவர் ஸ்தாபிதம் செய்து வைத்தார். அவ்வமயம், வள்ளி மலையிலுள்ள குமரி தீர்த்தத்திலிருந்து கொண்டுவரப்பட்ட ஜலத்தினுல் அம்பிகைக்கு அபிஷேகம் செய்யப்பட்டது. அது முதற்கொண்டு, ஒவ்வொரு ஆண்டும் தீபாவளிக்கு முதல் நாளன்று, கங்கா தீர்த்தத்தோடு குமரி தீர்த்தத்தின் புனித நீராலும் ஸ்ரீ தேவிக்கு அபிஷேகம் செய்யப்பட்டு வருகிறது.

ஸ்ரீ வைஷ்ணவீ கோயிலை இவ்வளவு அழகாகவும் பெரிதாக

வும் கட்ட வேண்டுமென்று, ஸ்ரீ பார்த்தசாரதி யவர்கள் அப்போது எண்ணியதேயில்லை. இன்னும் சொல்லப் போனால், நாட்டில் எத்தனையோ பழமையான கோயில்கள் பராமரிப்பாரின்றிப் பாழடைந்து கிடக்கும்போது, அவற்றைக் கவனிப்பதை விட்டுப் புதிய கோயில்களைக் கட்டுவதே ஒரு குற்றம் என்று கூறுபவர் அவர். எனினும் தேவியின் திருவுள்ளம் வேறுவிதமாயிருக்கும் போது அவரால் என்ன செய்ய முடியும்?

ஸ்ரீ பார்த்தசாரதி எப்போதுமே கலைச் சிறப்புள்ள பொருள்களைச் சேகரிப்பதில் ஆர்வம் கொண்டவர் அல்லவா? அத்தகைய கலைச் சிறப்புடன் கூடிய, பத்து அடி உயரமுள்ள மரக் கதவு, தற்செயலாக விலைக்கு வந்தது. அதை அவர் பிரியத்தோடு வாங்கினார். வாங்கினதை என்ன செய்வது? அந்தக் கதவைப் பயன்படுத்துவதற்காகவே, வைஷ்ணவீதேவி பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்த குடிலுக்கு எதிரே, அவர் ஒரு மண்டபத்தைக் கட்டத் தொடங்கினார்!

1957 மார்ச் முதல்தேதியன்று, அந்த மண்டபம் கட்டி முடிக்கப்பட்டது. ஆனால், மண்டபத்தைப் பெரிதாகக் கட்டிவிட்டு, கோயிலை மட்டும் ஒரு சிறிய குடிலாகவே வைத்திருக்க முடியுமா? அப்படி வைத்திருந்தால், அது பார்ப்பதற்கு அழகாக இருக்குமா? எனவே, 1958 பிப்ரவரியில், கோயில் கட்டட வேலைகள் துவக்கமாகி விட்டன. அந்தக் கோயிலுக்காக, விநாயகர், சுப்ரமண்யர், மஹேஸ்வரி, நாராயணி, ப்ராஹ்மி ஆகிய தேவதைகளின் விக்ரகங்கள், சிலை வடிக்கும் கலையிலே கைதேர்ந்தவர்களான பரம்பரைச் சிற்பிகளைக் கொண்டு தயார் செய்யப்பட்டன. மூன்று கலசங்களுடன் கூடிய ஒரு நேர்த்தியான விமானம் உருவாக்கப்பட்டது. இந்தப் புதிய திருக்கோயிலுக்கு 1958 மே 30ம் தேதியன்று கும்பாபிஷேகமும், அதே ஆண்டு ஜூலை 20ம் தேதியன்று மண்டலாபிஷேகமும், மிகச் சிறப்பாக நடந்தேறின.

ஆலயத்தின் கர்ப்பக்ருஹத்தில், தேவியின் எதிரே ஒரு ஸ்ரீ சக்ரம் வைக்கப்பட்டுள்ளது. இந்த ஸ்ரீ சக்ரம் பகவான் ஸ்ரீரமண மஹரிஷிகளின் கைபட்டது (எனவே, அவரது ஆத்மீக சக்தியால் பிராணப் பிரதிஷ்டை செய்யப்பட்டது) என்பது குறிப்பிடத்தக்கது.

கர்ப்பக்ருஹத்தில் இரமண மஹரிஷிகள், சேஷாத்ரி ஸ்வாமிகள், வள்ளிமலை ஸ்வாமிகள், அருணகிரிநாதர் ஆகியோரின் திருவுருவப் படங்கள் இடம் பெற்றுள்ளன. தேவிக்கு வலது புறத்தில் ஒரு ஸ்படிக விநாயகரும், மயில் மீதமர்ந்த ஆறுமுகப் பெருமானும் காட்சியளிக்கின்றனர். பெருமானின் இரு மருங்கிலும், அவரது தேவியர் இருவ

ரும் நின்று கொண்டிருக்கின்றனர். அவரது ஆறுமுகங்களுக்கும் வெவ்வேறு ஸஹஸ்ரநாமாவளிகளாலாகிய ஆறு அர்ச்சனைகள், இங்கு ஆடிக் கிருத்திகை தோறும் நடைபெற்று வருகின்றன. இம்மாதிரியான ஷண்முகார்ச்சனை நடைபெறும் திருத்தலங்கள் மிகமிகக் குறைவு என்பது குறிப்பிடத்தக்கது.

தேவிக்குப் பின்னால், பழமையான சலவைக் கற்களால் ஆகிய இரண்டு தெய்விகமான படிவங்கள் காட்சியளிக்கின்றன. அவற்றை சங்கநிதி யென்றும் பத்மநிதி யென்றும் சொல்லுகிறார்கள். இவ்விரு நிதிகளுக்கும் படிவங்கள் அமைக்கப்பட்டுள்ள கோயில்கள், மிகமிக அரிதாகவே காணப்படுகின்றனவாம்.

தேவிக்கு இடப்புறத்திலே, ஸ்ரீமீனாக்ஷியம்மையின் சிறிய வெண்கலச் சிலையொன்றும், குழலூதும் கோபாலனின் சின்னஞ் சிறு சிலையொன்றும் காட்சியளிக்கின்றன. இவற்றுள், ஸ்ரீ மீனாக்ஷியின் சிலையானது தங்கத்தினால் பூசப்பட்டுள்ளது.

இவற்றைத் தவிர, கோயில் பிராகாரத்திற்குத்தெற்கே சிறிது

தூரத்தில், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் சிறிய ஆலயம் ஒன்று அமைந்திருக்கிறது. பகவான் இரமணரே அங்கு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வடிவத்தில் அமர்ந்திருக்கிறார் என்று நம்புவதற்கான சில சூசகங்கள், பார்த்தசாரதியவர்களின் அனுபவத்தில் கிடைத்திருப்பதாகக் கூறப்படுகிறது. கீழக் கோபுரத்துக்கு எதிரே, வியாச விநாயகர் என்ற ஒரு பிள்ளையார் சிலை இருக்கிறது. இதனைக் காளிக் கொம்பன் என்றும் சொல்லுகிறார்கள். இந்தக் கணேசருக்கு இரண்டே கைகள்தாம் இருக்கின்றன. இவருடைய துதிக்கையும், இடப்புறமாகவோ வலப்புறமாகவோ வளையாமல், நேராகவே தொங்கிக் கொண்டிருக்கிறது.

ஸ்ரீ வைஷ்ணவீ கோயிலின் தெற்குச் சுவரினது வெளிப்புறத்திலே, ஸ்படிகத்தாலான ஒரு சிறிய ஹநுமார் விக்ரஹம் காட்சியளிக்கிறது. இவரையும் ஏராளமான பக்தர்கள் வந்து வழிபட்டுச் செல்கிறார்கள்.

ஸ்ரீ வைஷ்ணவீதேவியின் விக்ரஹத்திலே, வேறு எந்த தேவி விக்ரஹத்திலும் சாதாரணமாகக் காணவியலாத சில அபூர்வ அம்சங்கள் காணப்படுகின்றன. முதலாவதாக, அவள் தலையிலே ஜடாமகுடம் விளங்கிக் கொண்டிருக்கிறது; அதே சமயத்தில், அவளது எழில் வதனத்தின் இருபுறங்களிலும் விரித்த செஞ்சடைக் கற்றைகளும் காட்சியளிக்கின்றன. பொதுவாக, தேவி சிலைகளிலே இடுப்பிலும் முழங்காலிலும் இலேசான வளைவுகள் காணப்படுவது உண்டு. ஆனால் இந்தச் சிலையிலே அவை காணப்படவில்லை. இந்தச் சிலையிலே, ஸ்ரீவைஷ்ணவீ தேவி மிகவும் நேராக நிமிர்ந்து நிற்கிறாள். அவளது பார்வையானது, தன் மூக்கின் நுனியையே நோக்கியதாக இருக்கிறது. யோக சாஸ்திரங்களில் இதனை வைஷ்ணவீ முத்திரையென்று சொல்லுவார்களாம். யோகிகளுக்கு உரிய இந்த முத்ரையைத் தரித்திருப்பதால், ஸ்ரீவைஷ்ணவீ தேவியை யோகேஸ்வரி யென்று போற்றுகிறார்கள்.

அந்தப் பெயருக்கு ஏற்றபடி, யோக மார்க்கங்களில் ஆர்வம் கொண்ட பல பெரியோர்கள் அந்த ஆலயத்துக்கு அடிக்கடி வருகிறார்கள். பல சன்யாசிகள் அங்கேயே வந்து நிலையாகத் தங்கிவிட்டார்கள். அவர்களுக்காகப் பல குடீரங்களை அமைத்துக் கொடுத்ததோடல்லாமல், தாமும் அவர்களைப் போலவே ஒரு சன்யாசியாகி ஒரு குடிரத்தில் (அதாவது குடிலில்) வசித்து வருகிறார் ஸ்ரீ பார்த்தசாரதி. சன்யாசத்தை மேற்கொண்டதிலிருந்து, அவரை எல்லோரும் சாதுபார்த்தசாரதியென்றே அழைத்து வருகிறார்கள்.

ஸ்ரீ வைஷ்ணவீ மாதா சாதுக்களுக்கும் பிரியமானவளாய்

இருக்கிருள். அதே சமயத்தில் நம்போன்ற சாதாரண மக்களுக்கும் கண்கண்ட தெய்வமாக, கலியுக வரதையாக, விளங்கிக் கொண்டிருக்கிருள். தன் பக்தர்களுக்கு அவள் பாலித்து வருகிற திருவருள் நிகழ்ச்சிகளை எடுத்து எழுதுவதென்ருல், அதற்கு இந்த ஏட்டிலே இடம் காணுது! அவளை ஒருமுறை போய்த் தரிசித்து வந்தவர்கள், மீண்டும் மீண்டும் அங்கு போவதற்கே துடிப்பு உடையவர்களாய் ஆகிவிடுகிருர்கள். இயல்பிலேயே பக்தி சிரத்தையில்லாதவர்கள் கூட, அவளைப் பார்த்ததும் தம் உள்ளத்தில் பக்தி சுரக்கக் காண்கிருர்கள். எனவே, இளையோரும் முதியோரும், ஆண்களும் பெண்களும், ஏராளமான பேர்கள் வந்து அவளைத் தரிசித்துச் செல்கிருர்கள். மயிலாப்பூரிலே மகிழ மரத்தடியிலேயிருக்கும் போது வாரத்துக்கு ஒரு முறை மட்டுமே பூஜை நடைபெற்று வந்த வைஷ்ணவீதேவிக்கு, இப்போது நாள் தவருமல் திரிகால பூஜைகளும், அபிஷேகங்களும், அலங்காரங்களும் மிக விமரிசையாக நடைபெற்று வருகின்றன. அதிலும், வெள்ளிக்கிழமை, பௌர்ணமி, நவராத்ரி போன்ற விசேஷ காலங்களாயிருந்தால், அப்போது தேவியின் வடிவழகைக் கண்டு களிப்பதற்கு நம்இரு கண்களும் போதவே போதா! ஒரு செல்லக் குழந்தையைத் தன்னுடைய அன்னையானவள் ஆசையோடு அலங்கரித்து மகிழ்வது போல, சாது பார்த்தசாரதியவர்கள் ஸ்ரீ வைஷ்ணவீதேவியைப் பல்வேறு திருக்கோலங்களில் அலங்கரித்துப் பார்த்து ஆனந்தம் அடைகிருர். அவளை அல்லும் பகலும் இடையருது போற்றிப் பூஜித்து அவ்வாறு ஆனந்தம் அடைவதே, தாம் பிறவியெடுத்ததன் பெரும்பயன் என்று அவர் கருதுவதாய்த் தெரிகிறது!

ஸ்ரீ வைஷ்ணவீதேவியின் கைங்கர்யத்தில், சாது பார்த்தசாரதிக்கு ஆதி முதற் கொண்டே உறுதுணையாக இருந்துவருபவர் சாது ப்ரஹ்மண்யம். பூர்வாசிரமத்தில் டாக்டர் சுப்ரமணியம் என்பது இவரது பெயர். இவருடைய சொந்த ஊர் புதுக்கோட்டை. மருத்துவத் துறையிலே இவர் பெரிய பதவிகள் வகித்தவர். இப்போது அந்தத் துறையை விட்டே விலகி வந்து, சன்யாச ஆசிரமத்தை மேற்கொண்டு, அன்னை வைஷ்ணவீ தேவியின் சேவைக்கே தம் வாழ்வை அர்ப்பணித்துக் கொண்டு விட்டார் அந்தப் புண்ணிய புருஷர்.

ஸ்ரீ வைஷ்ணவீ கோயிலில் சாதி வேறுபாடில்லாமல் எல்லோரும் போய் வழிபாடு செய்யலாம். உள்ளத்தில் பக்தியும் உடலில் தூய்மையும் உடைய எல்லா ஆண் பெண்களுக்கும் அந்தக் கோயில் திறந்திருக்கும். அங்கே அர்ச்சனை செய்வதற்கென்று நியமிக்கப்பட்ட அர்ச்சகர்கள் யாரும் இல்லை. அங்குள்ள சன்யாசிகளே பூஜை, அர்ச்சனை

போன்ற எல்லாக் காரியங்களை யும் செய்கிறார்கள். வெளியிலி ருந்து வருகிற பக்தர்களிலே தகுதியுடையவர்கள் இருப்பார்க ளாயின், அவர்களும் சில சந் தர்ப்பங்களில் தாமே நேரடியாக அர்ச்சனை செய்வதற்கு அனு மதிக்கப்படுகிறார்கள். தேவியின் திருவடிகளிலே மலர் வைத்து வணங்குவதற்கு, அங்கு எல் லோருக்குமே அனுமதியளிக்கப் படுகிறது.

அம்பிகையின் திருவருட் பொலிவு நாளுக்கு நாள் வளர்ந் தோங்கி வருவதைப் பார்க்கும் போது, இது விரைவில் ஒரு பழனியைப் போலவோ திருப்பதி யைப் போலவோ ஆகிவிடக் கூடும் என்றே தோன்றுகிறது. நீடூழிகாலம் நிலைபெற்று விளங் கக் கூடிய இந்தத் திருப்பணி யின் கர்த்தாவாகிய சாது ஸ்ரீ பார்த்தசாரதியவர்களும், அவர் களது புகழும், மரபும், நீடூழி ஓங்கி வளருமாறு அன்னை ஸ்ரீ வைஷ்ணவீ தேவியை நாம் வழுத்துவோமாக!

●

# ஸ்ரீ சாந்தானந்தர் அருள்வாக்கு



ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்

காற்று எங்கும் சஞ்சரிப்பதைப் போல், நீ ஒன்றிலும் தொடர் புருது சஞ்சரித்து வா.

விட்டில் பூச்சி நெருப்பைக் கண்டு அழிவதுபோல், மனிதன் காமத்தால் அழிகிருன்.

ஆசை உன் அழிவிற்குக் கார ணம் என்று அறிந்துகொள்.

மனிதர்கள் க்ஷீணதசைஅடைவ தற்குக் காரணம் சுயநலப் பற்று கும். நாம் எண்ணும் ஒவ்வொரு எண்ணமும், செய்யும் செயலும், உடனே நம்மைத் தாக்குகின் றன.

ஆசைகள் கடமை என்ற வேடம் பூண்டு நம்மை மயக்க முயலும். நிராசை நாளடைவில் ஞானமாக வடிவெடுக்கிறது.

பற்றும் ஆசையும் உள்ளத்தில் கவலையையும் பயத்தையும் உண் டாக்கும்.

பிறருடையகுற்றம் குறைகளைக் கண்டு பிடித்து உன் மனத்தைக் கெடுத்துக் கொள்ளாதே.

முதலில் ஆசை அமிர்தம்போல் தோன்றும். முடிவில் விஷமா கும்.

குருவிற்குத் தொண்டு புரிவ தற்கு ஒவ்வொரு நாளும், ஒவ் வொரு நிமிஷமும் ஏற்ற காலமே!

''குருவிற்கு அதிக உதவி செய் திருக்கிறேன்!'' என்று நினைத் தால், குரு அருள் கிடைக்காது.

குரு வாக்கியத்தில் த்ருடமான விஸ்வாசமிருந்தால், முக்தி உன் கையிலேயே இருப்பதை நீ உணர் வாய்.

குருவின் அடி பற்றி வாழத் தெரிந்தவன், எதிலும் மயங்க மாட்டான்.

அன்போடு உழைக்கும் ஒருவன், விளைவு பற்றி எண்ணவேமாட்டான்.

இச்சையானது கடுகளவு இருந்தாலும், ஈசுவரனைக் காண முடியாது.

கடவுளோடு கலந்து களிப்பதற்குக் கருவியான இவ்வுடலை, நீ நாயும் பன்றியும் பயின்றுவரும் இன்பத்திற்கு இரையாக்குவது ஈனச் செயல்.

நம்பிக்கை மட்டும் போதாது. அது அறிவில் வேரூன்றி இருக்க வேண்டும்.

தனக்கென்று காப்பாற்றிய பொருள், தன்னையே கொன்று விடும்.

அஞ்ஞானி செல்லாத நாணயத்தைப் போன்றவன். மீண்டும் உருக்கி வார்ப்பதற்காக யமனிடம் அனுப்பப்படுகிறான்.

வித்தையைப் போன்ற கண் இல்லை.

சத்தியத்தைப் போன்ற தவம் இல்லை.

ஆசையைப் போன்ற துக்கம் இல்லை.

தியாகத்திற்குச் சமமான சுகம் இல்லை.

பரிபூரண சரணாகதியே ஞானத்தைப் பெறுதற்குரிய ஒரே வழி. பலனுக்காக உழைக்கும்உழைப்பினால், துன்பம்தான் ஏற்படும்.

என்னை ஆளும் ஸ்ரீ புவனேஸ்வரி அம்பிகையே! உனக்கென்றே அமைந்துள்ளது என்னுடைய ஹிருதயம் என்னும் குகை. அதை விட்டகலாது அமர்ந்து எனக்கு அருள்பாலிப்பாயாக!

ஊன்னுடைய மெய்யாலும், மொழியாலும், மனத்தாலும் ஸ்ரீ புவனேஸ்வரி மாதாவை சரணம் அடைந்து விடு. அம்மை உனக்கு இம்மையில் இகலோக இன்பங்களையும், மோக்ஷத்தையும் அளித்து ரக்ஷிப்பாள்.

சரணாகதியே மனிதனைப் பாது காக்கிறது. இது சத்தியம்.

கர்மத்தினாலும் ஆசையினாலும் குன்றிய மனம், அம்பிகையின் சேவையைத்தவிர வேறொன்றினாலும் அமைதியை அடையாது.

ஜெகதம்பிகே! நீ வீற்றிருப்பதற்கேற்ற புனித விடுதியாக என் காயத்தைத் திருத்தி அமைக்க நீ துணை புரிவாயாக. என்னை நீ கருணையோடு காத்தருள்வாயாக.

தாயே ஸ்ரீ புவனேஸ்வரி! எங்கள் உள்ளத்திலே வந்து நீ குடிகொண்டு விடு. எங்களது புன்மைக் குணங்களை மாற்றி விடு. எங்களைத் தூயர்களாக்கு. எங்களைத் திறமைசாலிகளாய் ஆக்குவாயாக.

அம்மையே! ஸ்ரீ புவனேஸ்வரி! துர்க்கையாக, லக்ஷ்மியாக, சரஸ்வதியாக, உமையாளாக, காளியாக, ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியாக அமைந்துள்ளவள் நீதான். நீதான் எல்லாம் என்று உணர்த்துவாயாக.

பொய்யர்கள் பயப்படட்டும். கோழைகள் கூவிக் குலேயட்டும். துரோகிகள் பின் செல்லட்டும். பிறருடைய ஏச்சுப்பேச்சுக்களுக்கு நீ ஏன் கவலேப்பட வேண்டும்?

அலக்ஷிய புத்தியுள்ளவன் அஹம்பாவத்தால் அழிந்து போவான்.

அஹம்பாவம் அற்றவனுக்கு ஆனந்தம் அவன் கையிலே இருக்கிறது.

தன்னேத்தானே பெரிய மனிதனுக நினேத்துத் தவிப்பவன், முட்டாள்களின் தலேவனுவான்.

தன்னேயே அனேத்திலும் காண்பவன் ஜீவன் முக்தன். அவனே மக்களுள் சிரேஷ்டனுவான்.

ஏ மனமே! அன்பே சிவம். அன்பிலார் உள்ளமே நரகமாகும். நீ அன்புமயமாகி வளர்க.

அன்பு இல்லாதவனுடைய உடலே நாய் நரிகளும் தீண்டா.

நீ அன்புக்கடவுளாகவே மாறிவிட, அன்பையே சிவமென நம்புவாயாக.

பொருமைப் படுபவனது வாய் கசக்கும். தலே வலிக்கும். அவனுக்குப் பாவம் செய்யத் துணிவு உண்டாகும். கொடுமை உண்டாகும். தேகம் எரியும். அவன் நல்லது கெட்டது அறியமாட்டான்.

எக்காலத்திலும் பொருமைப் படுபவன் துக்கத்தையே அடைவான். பொருமை அவனேயே எரித்து விடும்.

ஏ மனமே! நீ கள்குடித்த குரங்குபோல் அலேயாதே. சும்மாயிரு. கவலேப்படுவதால் நீ தேய்ந்து போகிருய்.

கடுகளவு ஆசை இருப்பினும், மன அமைதி உண்டாகாது. பொய் சொல்லுவதை விட்டு விடு. ஜாக்ரதை.

கடும் பேச்சுக்கள் மனிதனுடைய உயிர் நிலேகளேயும் எலும்புகளேயும் பிராணனேயும்கொளுத்துகின்றன.

கடுமையாகப் பேசுபவனே அலக்ஷ்மியின் (அதாவது, மூதேவியின்) இருப்பிடமென்றும், அவன் வாயில் நரகம் இருக்கும் என்றும் அறிந்து கொள்.

ஏ மனமே! உன் உள்ளத்தில் அன்னே புவனேஸ்வரி உயிருக்குயிராய், உண்மையாய் இருப்பதை மறந்து, நிமிடத்திற்கு நிமிடம் கள்ளத்தனம் செய்கிருய். நீ உயிருடன் இருப்பதற்கு அவள் காரணம் என்பதை மறவாதே! மறைக்காதே!

தன்னேத்தானே ஏமாற்றிக் கொள்பவனே முழு முட்டாளென்றே உலகம் கூறும். நீ நல்லவனுகி விடு.

# ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி ஆலயத் திருப்பணி

ஸ்ரீ ஏரி காத்த ராமபிரான் திருக்கோயில் கொண்டுள்ள மதுராந்தக க்ஷேத்திரத்தில், ஜகன்மாதா ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரிக்கு ஓர் ஆலயம் அமைக்கும் திருப்பணியை மேற்கொண்டிருக்கிருர்கள் சில ஆஸ்திகப் பெருமக்கள்.

இந்தத் திருப்பணிக்கு ரூபாய் எண்பதினுயிரத்துக்கு மேல் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

நம் தமிழ்நாட்டிலே, ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரிக்கு என எழுப்பப் பட்டுள்ள ஆலயங்கள் மிகமிகக் குறைவு. அந்தக் குறைவை நிறைவு செய்யவிருக்கிற இந்தக் கைங்கர்யத்தில், பொது மக்களும், முக்கிய மாக தேவி பக்தர்களும், பங்கு கொள்ள வேண்டியது மிக்க அவசிய மாகும்.

கருணையே வடிவானவள் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. அவளை தியானிப் பவர்களுக்கு, லக்ஷ்மி கடாக்ஷமும் சரஸ்வதி கடாக்ஷமும் அமோகமாய் ஏற்படுகின்றன என்பது ஆகமங்களின் துணிபு. அவளது திருப் பணிக் கைங்கர்யத்துக்குத் துணைபுரிவதன் மூலம், அம்பிகையின் திருவருளைப் பெறுவதற்கான ஓர் அரிய வாய்ப்பு, இப்போது நம் ''அருள்'' அன்பர்களுக்குக் கிட்டியிருக்கிறது.

பெரிய வசதி படைத்தவர்கள் பெரிய தொகைகள் அனுப்பலாம். சிறிய வசதியுடையவர்கள் சிறிய தொகைகள் அனுப்பலாம். தம் நண்பர்களையும் அனுப்புமாறு ஊக்குவிக்கலாம். ஆனுல் எந்தத் தொகையை அனுப்பினுலும், அம்பிகையின் திருவருள் அதனை ஒன்று நூருயிரமாக்கி, ஏதோ ஒரு வகையில் அவர்களுக்கு ஆதாயத்தை அளித்துவிடும் என்பது உறுதியிலும் உறுதி.

ஆகையால், அன்பர்கள் உடனே தம்மால் இயன்ற நன்கொடையை,

''பொதுக்காரியதரிசி,
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி திருப்பணிக் கமிட்டி
ஸ்ரீ தேவி சரணம்,
44, தேரடித் தெரு, மதுராந்தகம்''

என்னும் விலாசத்துக்கு அனுப்பி, அன்னை ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியின் அருட் கடாக்ஷத்துக்குப் பாத்திரமாகுமாறு கேட்டுக் கொள்கிருேம்.

— ஆசிரியர்

# ஸ்ரீ பிரச்நோத்தர ரத்னமாலிகா

வேதயாகபரிபாலக
சேங்காலிபுரம்
பிரம்மஸ்ரீ
அனந்தராம தீக்ஷிதர்



ஸ்ரீ பகவானுடைய உபதேசங்களே வேதங்கள். அவைகளில் நமக்கு சுகத்தை அளிக்கக்கூடிய உபாயங்களும், துக்கத்தைப் போக்கக்கூடிய உபாயங்களும் கூறப்பட்டுள்ளன.

சமுத்திரங்களிலுள்ள ரத்னங்களை நேராக யாவராலும் எடுத்து ஆபரணமாகத் தரித்துக்கொள்ள முடியாது. ஆனால் நல்ல தீரனான மனிதன், கவசங்களை தரித்துக் கொண்டு கடலில் மூழ்கி, ரத்தினங்களை எடுத்து சாணை பிடித்து, ஆபரணமாக ஆக்கிக் கொடுத்தால் எவ்வாறு சுலபமாய் தரிக்க முடியுமோ, அவ்வாறு கருணைக் கடலாகிய ஸ்ரீ ஆதி சங்கரர், வணக்கத்துடன் தன்னை வினவிய சிஷ்யனுக்கு, வேதங்களிலிருந்து ரத்தினம் போன்ற அந்த உபாயங்களை உபதேசித்துள்ளார்.

துக்கம் வேண்டாம், சுகம் தான் வேண்டுமென்ற யாவரும், இந்த உபதேசத்தை அறிந்து

நடக்க வேண்டும். அந்த சுகமே ஆனந்தரூபமான மோக்ஷமாகவும் ஆகிவிடும்.

இதை ஒருமுறை படித்தால் எவருடைய மனமும் சுத்தமாகி விடும். கேள்வி பதில் இவற்றுடன் கூடிய இந் நூலானது, 67 சுலோகங்கள் உள்ளதாக அமைந்துள்ளது.

இந்த பிரச்னோத்ர ரத்ன மாலையை கழுத்தில் அணிந்து கொண்ட (அதாவது, உள்ளத்தில் வைத்துக் கொண்ட) எவன் தான், இவ்வுலகிலும் அவ்வுலகிலும் அடைய வேண்டிய ஸுகத்தின் ஸாதனத்தை அறிந்தவனாக ஆகி அலங்கரிக்கப்பட்டவனாக ஆகமாட்டான்? (அதாவது அவன் இவ்வுலகிலும் அவ்வுலகிலும் அடையவேண்டியஸுகஸாதனத்தை அறிந்து விளங்குவான் எனக் கருத்து)

கேள்வி:- பூஜ்யர்களான ஓ குருவே! கிரஹித்துக் கொள்ள வேண்யது எது?

பதில்:- குருவசனம்.

கே:- விட வேண்டியது எது?

ப:- சாஸ்திரங்களில் கூடாதெனச் சொன்ன காரியம்.

கே:- எவர் குரு?

ப:- உண்மையை அறிந்து, சிஷ்யர்களின் நன்மைக்காக எப்பொழுதும் முயற்சி செய்பவர்.

கே:- படித்தவர்கள் சீக்கிரமாகச் செய்ய வேண்டியது எது?

ப:- பிறப்பு இறப்பின் தொடர்பை அறுத்தல்.

கே:- மோக்ஷமாகிற மரத்திற்கு விதை யாது?

ப:- ஸத்கர்மங்களால் சித்த சுத்தி ஏற்பட்டதும் உண்டாகிற சிறந்த ஞானமே.

கே:- சிறந்த நன்மையை அளிப்பது எது?

ப:- தர்மம்.

கே:- இவ்வுலகில் பரிசுத்தனாக இருப்பவன் எவன்?

ப:- விவேகமுள்ளவன்.

கே:- விஷம் எது?

ப:- பெரியோர்களை அலட்சியம் செய்தல்.

கே:- பிறப்பு இறப்பாகிற ஸம்ஸாரத்தில், ஸாரம் எது?

ப:- இதில் எது ஸாரமென்பதை பலமுறை ஆலோசிப்பதேயாகும். அப்போது ஸம்சாரம் ஸாரமில்லாதது எனத் தோன்றி விடுமென கருத்து.)

கே:- மனிதர்களுக்கு மிகப் பிரியமாய் இருக்க வேண்டியது எது?

ப:- தனக்கும் பிறருக்கும் நன்மையை செய்ய முயலுகிற ஜன்மம்.

கே:- கள்ளைப் போல் மோஹத்தை அளிக்கக்கூடியது எது?

ப:- ஸ்நேகம்.

கே:- திருடர்கள் யார்?

ப:- இந்திரியங்களின் விஷயங்கள்.

கே:- ஸம்ஸாரத்தை வளர்க்கும் கொடி எது?

ப:- ஆசை.

கே:- சத்ரு யார்?

ப:- முயற்சி செய்யாமல் இருத்தல்.

கே:- இவ்வுலகில் எதனுல் பயம்?

ப:- மரணத்தினுல்.

கே:- குருடனுக்கு மேற்பட்ட குருடன் யார்?

ப:- ஆசையுள்ளவன்.

கே:- எவன் சூரன்?

ப:- ஸ்திரீகளின் பார்வையாகிற அம்புகளினுல் மனங்கலங்காதவன்.

கே:- காதுகளால் இவ்வுலகில் அம்ருதம் போல் அருந்தக்கூடியது எது?

ப:- ஸாதுக்கள் செய்யும் உபதேசமேயாகும்.

கே:- கௌரவத்திற்கு எது காரணம்?

ப:- யாசிக்காமல் இருத்தல்.

கே:- கண்டுபிடிக்க முடியாதது எது?

ப:- பெண்களின் சரிதம்.

கே:- எவன் கெட்டிக்காரன்?

ப:- பெண்களின் நடையினுல் கெடுக்கப்படாதவன்.

கே:- துயரம் எது?

ப:- திருப்தி இல்லாமல் இருத்தல்.

கே:- தாழ்மையாக்குவது எது?

ப:- கீழ்ப்பட்டவனிடத்தில் யாசித்தல்.

கே:- நன்கு ஜீவித்திருத்தல் என்பது என்ன?

ப:- குற்றமில்லாமலிருத்தல்.

கே:- எது அறிவின்மை?

ப:- கல்வியைக் கற்றும், அதை அப்யஸிக்காமல் இருத்தல்.

கே:- விழித்திருப்பவன் எவன்?

ப:- விவேகமுள்ளவன்.

கே:- எது தூக்கம்?

ப:- அறிவில்லாமலிருத்தல்.

கே:- தாமரை இலையில் இருக்கும் ஜலம்போல் நிலை இல்லாதது எது?

ப:- இளமை, பொருள், ஆயுள்.

கே:- ஓ ஆசார்யனே, சந்திர கிரணம் போல் தாபத்தைப் போக்குகிறவர்கள் யார்?

ப:- ஸாதுக்கள்!

கே:- எது நரகம்?

ப:- பிறருக்கு வசமாகுதல்.

கே:- ஸௌகத்தை அளிப்பது எது?

ப:- எல்லாப் பற்றுதல்களையும் விட்டுவிடுதல்.

கே:- ஸாதிக்க வேண்டியது எது?

ப:- பிராணிகளுக்கு நன்மை செய்தல்.

கே:- பிராணிகளுக்கு பிரியமாக உள்ளது எது?

ப:- உயிர்.

கே:- கெட்ட பயனை அளிக்கக் கூடியது எது?

ப:- அஹங்காரம்.

கே:- சுகத்தை அளிக்கக் கூடியது எது?

ப:- ஸாது ஜனங்களின் ஸ்னேஹம்.

கே:- எல்லோருடைய துக்கங்களையும் (அல்லது, எல்லா துக்கங்களையும்) போக்குவதில் எவன் சமர்த்தன்?

ப:- யாவற்றையும் கொடுத்து விடுகிறவன்.

கே:- சாவு எது?

ப:- படிப்பில்லாதவனின் பிடிவாதத் தன்மை.

கே:- விலை மதிப்பிட முடியாதது எது?

ப:- நல்ல சமயத்தில் செய்யும் உதவி.

கே:- சாகும்வரை மனத்தைத் துன்புறுத்துவது எது?

ப:- இரகசியமாகச் செய்த பாபம்.

கே:- எவைகளை அடைய முயற்சி செய்ய வேண்டும்?

ப:- கல்வியைக் கற்பது, நல்ல மருந்தைப் பெறுவது, தானம் செய்தல் இவைகளை அடைவதற்காக!

கே:- எவைகளை அலட்சியம் செய்ய வேண்டும்?

ப:- கெட்டவர்களையும், பிறருடைய பொருள்களையும்.

கே:- இரவு பகலாய் நினைக்க வேண்டியது எது?

ப:- வாழ்க்கையில் ஸாரமில்லை என்பதே. பெண்டிரை அல்ல.

கே: அன்புடன் செய்ய வேண்டியது எது?

ப: ஏழைகளிடத்தில் கருணை, சாதுக்களிடத்தில் ஸ்னேகம்.

கே: உயிர்போகும் தறுவாயிலும் எவனுடைய மனத்தைத் திருத்த முடியாது?

ப: படிப்பில்லாத பிடிவாதக்காரன், எதிலும் சந்தேகப்படுகிறவன், ஸுகத்திலும் துக்கப்படுகிறவன் (அழுமூஞ்சி), செய்ந்நன்றி மறந்தவன் ஆகிய இவர்களுடைய மனத்தை!

கே: எவன் நல்லவன்?

ப: ஸாதுக்களுடைய ஆசாரத்தை விடாமல் நடத்துகிறவன்.

கே: எவன் கீழ்ப்பட்டவன்?

ப: கெட்ட நடை உள்ளவன்.

கே: இவ்வுலகை ,எவன் ஜயிப்பான்?

ப: ஸத்யமும் பொறுமையும் உள்ளவன்.

கே: எவனை தேவர்களும் நமஸ்கரிக்கின்றனர்?

ப: தயையை முக்யமாய் கைக்கொண்டவனை.

கே: புத்திமான் எதைக் கண்டு பயமடைவான்?

ப: ஸம்ஸாரமாகிற காட்டைக் கண்டு.

கே: ஜீவராசிகள் எவன் வசத்திலிருக்கும்?

ப: ஸத்யமாயும் பிரியமாயும் பேசி, வணக்கத்துடன் இருப்பவனிடம்.

கே: எந்த வழியில் இருக்க வேண்டும்?

ப: இவ்வுலகிலும் அவ்வுலகிலும் இலாபத்தை அளிக்கும் நியாயமான வழியில்.

கே: யார் குருடன்?

ப: தப்புக் கார்யத்தையே செய்கிறவன்.

கே: செவிடன் யார்?

ப: நன்மையான சொற்களைக் கேட்காதவன்.

கே: ஊமை யார்?

ப: நல்ல சமயத்தில் இனிமையான சொற்களை சொல்லத்தெரியாதவன்.

கே: எது தானம்?

ப: கேட்காமலே கொடுப்பது.

கே: சிநேகிதன் யார்?

ப: பாபம் செய்யக்கூடாதெனத் தடுக்கிறவன்.

கே: எது அலங்காரம்?

ப: நல்ல நடை.

கே: வாக்கிற்கு அழகு எது?

ப: ஸத்யம்.

# சதாபிஷேக தம்பதிகள்



பிரம்மஸ்ரீ வரகூர் அ. சேஷாத்ரி சர்மா அவர்கள், இன்றுள்ள தமிழ்ப் பத்திரிகையாளர்களுக்குள்ளே மிகவும் பெருமைக்குரியவர். இந்து மதத்தின் பண்பாட்டு நெறிகளைப் பரப்புவதில் ஆர்வம் உடையவர். நமது "அருள்" பத்திரிகையின் வளர்ச்சியிலே பெரிதும் அக்கறை கொண்டவர். அன்னாரது சதாபிஷேக வைபவம் அண்மையில் திருவல்லிக்கேணியிலே மிக்க சிறப்பாக நடைபெற்றது. அவரும் அவரது தர்மபத்தினியாரும், இந்நிலவுலகில் நீடூழிகாலம் வாழ்ந்திருக்குமாறு இறைவனை வழுத்துகிறோம்!

— ஆசிரியர்

# மானத்திற்காக உயிர்நீத்த மன்னவன்



ஸ்ரீ திருமுருக
கிருபானந்த வாரியார்

வனத்தினுல் விலங்குகள் வாழ்கின்றன; விலங்குகளால் வனம் வளம் பெறுகின்றது. வனம் இல்லேயேல் விலங்குகள் வாழ முடியாது. விலங்குகள் இல்லேயேல் வனத்தை மக்கள் அழித்து விடுவார்கள். ஆகவே ஒன்றுக்கு ஒன்று தொடர்புடையது.

இதுபோல் அரசனிடத்திலே புலவன் வாழ்ந்து மதிப்படைவான். புலவனுல் அரசனுக்குப் பெருமையுண்டாகும். அரசாங்கப் புலவன் என்றும், மன்னவர் மதிக்கத்தக்கவன் என்றும் புலவனுக்குப் புகழ். இப்படி ஒருவருக்கு ஒருவரால் உயர்வு ஏற்படுகிறது.

வனம் போல மன்னவன். உயர்ந்த விலங்கு வாழ்வதனுல், காட்டை உலகத்தவர் புகழ்வர். ''அது ஆனேக்காடு'', ''அக்காட்டில் சிங்கம் வாழ்கின்றது'' என்று கூறுவர்.

ஒரு சிறந்த புலவர் இருந்தால் மன்னவனுக்கு மட்டற்ற புகழ் உண்டாகும். சடையப்ப முதலியாரால் கம்பருக்கு நன்மை. கம்பரால் சடையப்பருக்கு அழியாத புகழ் உண்டாயிற்று.

அக்காலத்தில் அரசர்கள் தக்க புலவரைத் தமது சபையில் வைத்துப் போற்றிப் புகழ்ந்து சிறப்பித்தார்கள். சேரநாட்டைச் சேரமான் கணேக்காலிரும் பொறை என்ற மன்னவன் அரசு புரிந்து வந்தான். அம்மன்னவனிடம் பொய்கையார் என்ற புலவர் பெருமான் இருந்தார்.

அவர் கற்றவருக்குத் திலகம் போன்றவர். அறிவாற்றலில் சமானம் இல்லாதவர். தேனினும் இனிய செந்தமிழ்ப் பாடல்

கள் பாடும் தனிப் பெருஞ் சிறப்புடையவர். பொய்கையாருடைய புகழ் மணம் பூதலம் எங்கும் பரவியிருந்தது. இவர் நண்பராக இருந்தபடியால், கணைக்காலிரும் பொறைக்கு எல்லையில்லாத பெருமை ஏற்பட்டிருந்தது.

அதே சமயம், சோழ வள நாட்டின் தலைநகராகிய உறையூரில், செங்கணான் என்ற சோழன் ஆண்டு வந்தான். அவன், "பொய்கையாருடைய தொடர்பினால் சேர மன்னனுக்குப் புகழ் ஏற்பட்டுள்ளது; ஆதலால் நாமும் பொய்கையாரை அழைத்து, அவரை நமது சபையில் வைத்துப் பாராட்டி, அவரிடம் தமிழ் பயின்று புகழ்பெற வேண்டும்" என்று கருதினான்.

அப்படிக்கருதிய அவன், தானே சென்று புலவரைத் தொழுது அழைப்பது முறை. அரசன் சிறிது தருக்குடையவன். "நான்" என்ற அகந்தையுடையவன். புலவரையழைக்கவேண்டிய முறையறியாத முரட்டு மன்னன். தோள் வலியாலும், வாள் வலியாலும், படை வலியாலும் தான் பெரியவன் என்ற அகங்காரத்தால் தலை கிறுகிறுத்தவன். புலவரை அழைத்து வருமாறு ஒரு தூதனை ஏவினான்.

அத்தூதன் சேர நாடு சென்று, பொய்கையார் என்ற புலவரைப் பார்த்து, "ஐயா! எங்கள் சோழ மன்னன் செங்கணான் தங்களைத் தன்பால் வந்துதங்கியிருக்குமாறு அழைக்கின்றார். சேர நாட்டைப் பார்க்கினும், சோழநாடு வளமையுடையது. சேரனைப் பார்க்கிலும் சோழ மன்னன் சிறப்புடையவன். ஆகவே புறப்பட்டு வாருங்கள்" என்றான்.

புலவர் அந்த ஏவலனைப் பார்த்து, "அப்பா, நான் என் நண்பன் கணைக்காலிரும் பொறையைவிட்டு நீங்கியிரேன். ஆகவே வருவதற்கு அனுகூலம் இல்லை என்று உங்கள் மன்னவனுக்குச் சொல்" என்றார். தூதன் போய்ச் சோழனிடம் புலவர் வர மறுத்ததை யுரைத்தான்.

சோழனுக்கு மிக்க வருத்தம் உண்டாயிற்று. மீளவும் அத்தூதனை, "சேரனிடம் போய்ப்புலவனை அனுப்பி வைக்குமாறு கூறு" என்று அனுப்பினான்.

தூதன் சேரனிடம் வந்து பணிந்து, "ஐயா! பொய்கையாரை அனுப்பி வைக்குமாறு எங்கள் மன்னர் பிரான் கூறினார்" என்றான். "தூதனே! புலவரைப் போம் என்றும், இரும் என்றும் கூற எனக்கு உரிமையில்லை. அவர் விரும்பினால் அழைத்துப் போ', என்றான் சேரன்.

தூதுவன் இதனைச் சோழனுக்கு அறிவித்தான். சோழனுக்குச் சீற்றம் எழுந்தது. "புலவனுக்கும் சேரனுக்கும் என்ன மமதை? என் சொல்லை மதித்தார்கள் இல்லை. என்னை அலட்சியம் செய்துவிட்டார்கள். நீபோய்ச் சேரனைப் போருக்கு வரச்சொல்" என்றான்.

சேரன் போருக்கு வந்தான். சேரனுக்கும் சோழனுக்கும் கடும் போர் நேர்ந்தது. சோழன் எல்லா வகையிலும் வலிமை மிகுந்தவன். அதனால் சேரனை வென்று சிறையில் அடைத்துவிட்டான். கணைக்கால் இரும்பொறை என்ற சேரர்கோன் சிறையில் கிடந்து வாடினான்.

பொய்கையாரையும் பிடித்துச் சிறையில் அடைத்துவிட்டான் செங்கணான். மிகப்பெரும் புலவராகிய பொய்கையார், தான் சிறைப்பட்டது பற்றி வருந்தினார் இல்லை. தன்னுடைய நண்பன் சேரன் தன் பொருட்டுச் சிறை புகுந்தது பற்றிப் பெரிதும் வருந்தினார். சேர மன்னனுக்கு விடுதலை கிடைக்குமாறு, "களவழி நாற்பது" என்ற நூலைப்பாடினார். அதனைச் சோழன்பால் அனுப்பினார்.

அந்த அரிய நூலைக்கண்ட செங்கணான் பெரிதும் உவகை கூர்ந்தான். உடனே சிறைச்சாலைக்கு ஓடி வந்தான். சிறையில் இருந்த புலவரை வணங்கினான். அவரைச் சிறையிலிருந்து விடுவித்தான்; அவரைப் பாராட்டினான். "புலவர் பெருமானே! தாங்கள் இணையற்ற அறிஞர்; தங்கட்கு நான் எதையுஞ் செய்யக்கடமைப்பட்டி

ருக்கிறேன், இந்த அரிய களவழி நாற்பது என்ற நூலினுல் நான் பெரிதும் மகிழ்கிறேன். தங்கட்கு நான் செய்யவேண்டியது யாது?'' என்று வினவினுன்.

பொய்கையார் ''சோழ வேந்தனே! எனக்கு எப்பொருளுந் தேவையில்லே. என் உயிரினும் இனிய நண்பர் கணேக்காலிரும் பொறையைச் சிறையிலிருந்து விடுவித்தருள்'' என்ருர். சோழ மன்னன் ''அப்படியே'' என்று கூறி, சேர மன்னனே விடுதலே செய்யும் பொருட்டுப் பொய்கை யாருடன் புறப்பட்டான்.

அந்த நேரத்தில், சிறையில் இருந்த சேரர் சிறைக்காவலனேப் பார்த்து, ''தாகவிடாய் அதிகரித்துளது. சிறிது தண்ணீர் கொடு'' என்று கேட்டார். கேட்டவர் மன்னர் என்பதையும் அவருடைய பெருமிதத்தையும் எண்ணிப் பாராத அவ்வேலேக்காரன், அலட்சியமாகவும் தாமதமாகவும் சென்று, ஒரு ஏனத்தில் நீர் கொணர்ந்து இடக்கரத்தால் நீட்டினுன்.

இதனேக் கண்ட சேர மன்னன் மனம் மிகவும் வருந்தியது. ''கேவலம், இவ்வேலேக்காரன் என்னே ஒரு சிறிதும் மதியாமலும், ஒரு பொருளாக எண்ணுமலும் அசட்டை செய்து தாமதித்துத் தண்ணீர் கொணர்ந்து இடக்கரத்தால் நீட்டுகின்ருன். இத்தண்ணீரைக் குடித்து இனி உயிர் வாழ வேண்டுமா? உயிரினும் மானம் பெரிதல்லவா? தெய்வமே! இனி யான் வாழமாட்டேன்; உன் பாதத்திற்கு வருகின்றேன்!'' என்று கூறி, ''ஈசனே'' என்று கண்களே மூடினுர். உயிர் பிரிந்து விட்டது.

சோழனும் பொய்கையாரும் அதே நேரத்தில் அவரைச் சிறையிலிருந்து விடுவிக்க வந்தார்கள். அவர் உடம்பாகிய சிறையிலிருந்தே தன்னே விடுவித்துக் கொண்டு புறப்பட்டுவிட்டார் என்பதைக் கண்டார்கள்.

தனது நண்பன் ஆவி அகல்வதைக் கண்டார் பொய்கையார். ''ஆ நண்பா!'' என்று வாய்விட்டு அலறினுர். அவன் அருகில் அமர்ந்து கண்களே மூடினுர். அவ்வளவுதான். பொய்கையார் ஆவி பிரிந்துவிட்டது.

இந்தத் துன்பக் காட்சியைச் சோழ மன்னன் கண்டான். ''அந்தோ கெட்டேன்! மானத்திற்காக இவர் உயிர் விடுத்தார். நண்பரின் மரணத்தைக் கண்டு புலவரும் மாண்டார். இத்தகைய ஒப்பற்ற உத்தம நண்பர்களேப் பிரிக்க நான் முயன்றேன். என்ஞல் இவர்கள் மரணமுற்ருர்கள். இப்பழிபாவம் என்னே விட்டு அகலாவே! நான் அறியாமையாலும் அகங்காரத்தாலும் கெட்டேன். தெய்வமே! என்னே மன்னிக்க வேண்டும். இவர்களுடைய ஆன்மாக்கள் சாந்தியடைக'' என்று வேண்டினுன்.

''மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னுர்
உயிர்நீப்பர் மானம் வரின்''

என்ற திருவள்ளுவரின் திருவாக்குக்குச் சேர மன்னன் இலக்கியமாக நின்ருன்.

# ஆலயதர்சனம் செய்யும் முறை

பழனி ஸ்ரீ அர்த்த
நாரீஸ்வரக் குருக்கள்



ஒரு பெரிய மனிதரின் தயவை நாடி அவருடைய இல்லத்துக்குச் செல்லுவோமானுல், அங்கே நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். நடந்து கொள்ள வேண்டிய முறையைத் தெரிந்து கொள்ளாமல் முறை தவறி நடந்துகொள்வோமானுல், நாம் நாடிச் செல்லும் அந்தப் பெரிய மனிதரின் தயவு நமக்குக் கிடைக்காது என்பது மட்டும் அல்ல; அவருடைய கோபத்துக்கும் நாம் ஆளாக நேரிடும். அதாவது, குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொண்ட கதையாக அது ஆகிவிடும்.

இந்த பூமண்டலத்திலுள்ள மிகப்பெரிய மனிதர்களைக் காட்டிலும், இறைவன் மிக மிகப் பெரியவன். அந்த இறைவனது திருவருளைப் பெறுவதற்காகவே, நாம் அவனது திருக்கோயிலுக்குச் செல்லுகிறேம். அப்படிச் செல்லும்போது, அந்தக் கோயிலில் நாம் நடந்து கொள்ள வேண்டிய சில முறைகள் இருக்கின்றன. அந்த முறைகளுக்கு மாருக நாம் நடந்து கொள்வோமாயின், நம்மால் இறைவனது திருவருளைப் பெற முடியாது என்பது மட்டும் அல்ல; பல அபசாரங்களுக்கும் நாம்ஆளாகும்படி நேர்ந்துவிடும்.

முதலாவது, ஆலயத்துக்குச் செல்லும்போது, நம் உள்ளத்திலே "நான்" என்னும் அகந்தையை எழும்ப விடக்கூடாது. நாம் ஒரு பெரிய மன்னராகக்கூட இருக்கலாம். அல்லது அந்த மன்னரைக்காட்டிலும் பெருமைக்குரிய மஹா பண்டிதராயிருக்கலாம். மாண்புமிகு அமைச்சராயிருக்கலாம். நாவசைந்தால் நாடு அசையக்கூடிய மாபெரும் அரசியல் தலைவராய் இருக்கலாம். செல்வத்திலே புரளும் சீமானுயிருக்கலாம். கற்பனையிலேபுரளும் கவிச் சக்ரவர்த்தியாக இருக்கலாம். ஆனுல், "நான் ஒரு பெரிய

மனிதன்'' என்ற செருக்கு அனைத்தையும் நம் வீட்டிலேயே மூட்டை கட்டிப் போட்டுவிட்டு, அதன் பிறகு தான் நாம் கோயிலுக்கு புறப்பட வேண்டும்.

''எனக்கு இந்திரனது பதவியையே தந்தாலும், அதை நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன். அம்மாதிரிப் பதவிகளுக்கெல்லாம் மேலானதாக, திருவேங்கட மலையிலுள்ள சுனையிலே ஒரு சின்னஞ் சிறு மீனாகப் பிறக்கக் கூடிய பாக்கியம் எனக்குக் கிடைக்குமானால், அதனையே நான் களிப்போடு ஏற்றுக் கொள்வேன்!'' என்கிறார் குலசேகராழ்வார்.

இந்த ஆழ்வார் பெருமானது மனப் பான்மையை, ஆலயம் செல்லும் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க முயலவேண்டும்.

குலசேகராழ்வார் ஒரு மா பெரும் மன்னராக வாழ்ந்தவர். அவரே, திருவேங்கடச் சுனையிலுள்ள ஒரு மீனைக் காட்டிலும் தம்மை எளியவராகக் கருதிக் கொள்கிறார். இத்தகைய தன்னடக்கமே, ஆலய தரிசனத்துக்கு இன்றியமையாததாகவுள்ள அடிப்படைத் தகுதியாகும்.

குலசேகராழ்வாரின் மனப்பான்மையை நாம் கடைப்பிடிப்பதாயிருந்தால், ஆலயத்திலே ஊர்ந்து திரிகின்ற எறும்புகள், புழுக்கள் இவற்றினும் கூட, நம்மை நாம் கடையராகக் கருதிப் பழகவேண்டும். ஆலயத்திலே பணிபுரியும் கடைநிலை ஊழியர்களைக்கூட, நாம் தேவகணங்களாகப் பாவித்துப் பழக வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, இறைவனது திருமேனியைத்தீண்டி வழிபாடு இயற்றுகிற அர்ச்சகர்களை, நாம் அந்த இறைவனாகவே எண்ணி வணங்க வேண்டும்.

இறைவனது திருமேனியைத் தீண்டி ஒருவர் பூஜை செய்கிறார் என்றால், அந்தப் பெறற்கரிய பேற்றைப் பெறுவதற்கு அம் மனிதர் இதற்கு முந்தின பல கோடி பிறவிகளில் செயற்கரிய தவங்களையெல்லாம் செய்து முடித்து, எண்ணற்ற புண்ணியங்களைப் பண்ணியிருக்கவேண்டும். அதனால்தான், ''முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்!'' என்கிறார் சுந்தரமூர்த்தி நாயனார்.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளைக் காட்டிலும் நாமெல்லாம் எந்த வகையிலும் பெரியவர்கள்அல்லர். ஆகையால், ஆலயத்திலுள்ள அர்ச்சகர்களை நாம் மிகமிக வணக்கத்துடனேயே அணுகவேண்டும்.

அது மட்டும் அல்ல. கோயிலில் உள்ள விக்ரகங்களை நாம் அந்த அந்த தெய்வங்களாக எண்ணி வழிபடவேண்டுமே தவிர, வெறும் கற்சிலைகளாகவோ அல்லது வெண்கலச் சிலைகளாகவோ கருதக்கூடாது. கருதி, வெறுமே அவற்றின் கலையழகை மட்டும் ரசித்துக் கொண்டிருக்கக்கூடாது. தெய்வங்களின் எதிரே நிற்கும் போது, நம் உள்ளத்தில் பக்தியுணர்ச்சி பொங்க வேண்டுமே தவிர, ரசனை உணர்ச்சி எழக் கூடாது. கலாரசனையில் உள்ளம் ஈடுபடுமானால், அந்த தெய்வத்தை நாம் ஒரு கல்லாகவோ செம்பாகவோ தான் கருதுகிறோம் என்று ஆகிறது. அப்படிக் கருதுபவன் நரகத்தையே அடைகிறான் என்பது ஆகமங்களின் துணிபு.

நாம் சிவன் கோயிலுக்குப் போனால், அந்தக் கோயிலில் இருக்கும் வரை நாம் திருக்கயிலாயத்தில் இருப்பதாகவே எண்ணிக் கொள்ள வேண்டும். அவ்வாறே, பெருமாள்

கோயிலுக்குப் போனால் ஸ்ரீ வைகுண்டத்திலும், அம்பிகையின் ஆலயத்துக்குச் சென்றால் ஸ்ரீநகரத்திலும் இருப்பதான உணர்வை, நம் உள்ளத்தில் முயன்று உருவாக்கிக் கொள்ள வேண்டும். அம்மாதிரி உருவாக்கிக் கொள்வதிலே தான் ஆலயதர்சனத்தின் பயனே அடங்கியிருக்கிறது.

அத்துடன், ஆலயத்திலேபோய் விபூதியோ குங்குமமோ தீர்த்தமோ நாம் பெற்றுக்கொள்ளும் போது, ஆண்டவனே அர்ச்சகர் வடிவத்தில் வந்து நமக்கு அந்தப் பிரசாதத்தைத் தருவதாக பாவிக்கவேண்டும். பிரசாதம் என்ற சொல்லுக்கே, திருவருள் என்றுதான் பொருள். எனவே, விபூதியை வெறும்சாம்பலாகவும், குங்குமத்தை வெறும் மஞ்சள் பொடியாகவும், தீர்த்தத்தை வெறும் குழாய்த்தண்ணீராகவும் நினைத்துக் கீழே சிந்திவிடாமல், அவற்றை இறைவனது திருவருளின் சின்னங்களாகக் கருதி, நாம் பயபக்தியோடு பெற்றுக் கொள்ளவேண்டும். அப்படிப் பெற்றுக் கொள்வோமானால், அந்த விபூதியும் குங்குமமும் தீர்த்தமுமே, நம்முடைய துன்பங்களையெல்லாம் போக்கி இன்பங்களை நல்குகிற திவ்ய சக்திகளாய் நின்று நம்மைக் காப்பாற்றும்.

மேலும், ஆலயத்துக்கு வழிபட வருகிற மற்ற ஜனங்களிடத்திலும், நாம் மிகவும் மரியாதையோடு நடந்துகொள்ளவேண்டும். அவர்கள் எல்லோரையும் நாம் உண்மையான பக்தர்களாகவே பாவித்து, உள்ளத்தால் வணக்கம் செலுத்தவேண்டும். அப்போது தான், நம் உள்ளத்திலும் உண்மையான பக்தி ஊற்றெடுக்கத் தொடங்கும்!

# அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர்

[திருஞான சம்பந்தப் பெருமானின் அற்புதச் செயல்களை நாம் சென்ற இதழில் கண்டோம். இவ்விதழில், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், மணிவாசகப் பெருமான் ஆகிய இம்மூவர் ஆற்றிய அற்புதச் செயல்களையும் காண்போமாக!

— ஆசிரியர்]

திருநாவுக்கரசு நாயனார்

1. தமக்கு வந்த கொடிய சூலையைத் திருவதிகை வீரட்டானத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவ பெருமான்மீது பதிகம்பாடித் தீர்த்துக் கொண்டார்.

2. சமணர்கள் இட்ட நீற்றறையில் ஏழுநாட்கள் இருந்து, எந்தவிதமான ஊறுபாடுமின்றி, சிவபெருமான் திருவருளால் வெளி வந்நார்.

3. சமணர்கள் ஊட்டிய நஞ்சு கலந்த பால்சோற்றை உண்டும், இறைவனருளால் உயிருடனிருந்தார்.

4. சமணர்களால் தன்னைக் கொல்லும்படி ஏவிவிடப்பட்ட யானையை, தன்னை வலம் வந்து பணியும்படி செய்தார்.

5. சமணர்கள் தன்னைக் கல்லிற் கட்டிக் கடலிற்போட, அக் கல்லையே தெப்பமாகக் கொண்டு மிதந்து கரை சேர்ந்தார்.

6. திங்களூர் அப்பூதி அடிகள் நாயனாரின் மூத்த மகன் பாம்பு தீண்டி இறக்க, பதிகம்பாடி அவனை உயிர்ப்பித்தருளினார்.

7. சிவனடியார்களுக்கு அமுது ஊட்டுவதற்காகத் திருவீழிமிழலையில் சிவபெருமான் நாள்தோறும் அருளிய பொற்காசுகளைப்பெற்று, பஞ்சம் தீரும் வரை பலரது பசியைத் தீர்த்தருளினார்.

8. திருமறைக்காட்டில் வேதங்களால் பூட்டப்பெற்ற திருக்கோயிற் கதவைப் பதிகம்பாடித் திறந்தருளினார்.

9. திருப்பைஞ்ஞீலிக்குச் செல்லும் மார்க்கத்தில், இவர் பசியால் வருந்துவதைச் சிவபெருமான் அறிந்து, தாம் ஒரு பிராமண வேடம் பூண்டு வந்து இவருக்குக் கட்டமுது கொடுத்து இவரது பசியைத் தணித்து, ஒருகுளத்தையும் சோலையையும் உண்டு பண்ணி, இவரை அக்குளத்தில் நீர் அருந்தும்படியாகவும், அச் சோலையில் இளைப்பாறும்படியாகவும் செய்தருளினார்.

10. இவர் கயிலாய தரிசனம் செய்யும் அபிப்பிராயத்தோடு காசியைக் கடந்து வெகுதூரத்தில் சென்று கொண்டிருக்கும் போது, சிவபெருமான் ஒரு பிராமண வேடத்தோடு இவர் எதிர் சென்று இவர் கருத்தை வினவ, இவர் அதை தெரிவிக்க, அவர் இவருக்கு ஒரு குளத்தைக் காட்டி அதில் இவரை மூழ்கச் சொல்ல, இவர் அவ்வாறே மூழ்கி நீரினின்றும் எழுந்திருக்கும்போது திருவையாற்றுத் திருக்குளக் கரையில் வெளிப்பட்டுக் கயிலாய தரிசனம் செய்தார். பின்புகயிலாயத் தோற்றம் மாறி ஆலயமாய் இருக்கக் கண்டரர்.

11. திருப்புகலூரில் இவர் உழவாரப்பணி செயது கொண்டிருக்கும் நாளில், இவர் செதுக்குமிடமெல்லாம் பொன்னும் நவரத்தினங்களும் சிவபெருமான் அருளால் உண்டாக, அவைகளை மண்ணுகவும், கல்லாகவும் மதித்துப் பொய்கையில் எறிந்துவிட்டார். பின்னும் சிவபெருமான் இவரை மயக்கும்படி ஸ்திரீகளை அனுப்ப, இவரை மயக்க முடியாமல் அவர்கள் வெட்கிப் போயினர்.

12. திருப்புகலூரில், இறைவனது திருவடியை அடைய விரும்பி, ''புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்'' என்று பாடிச் சிவபெருமானேடு இரண்டறக் கலந்தார்.

### சுந்தரமூர்த்தி நாயனுர்

1. குண்டையூர்க் கிழார் தந்த நெற்குவியல்களைச் சிவபெருமான் திருவருளால் பூதங்களைக் கொண்டு திருவாரூருக்கு எடுப்பித்துக்கொண்டார்.

2. திருப்புகலூர்த் திருக்கோயில் முற்றத்தில், தலைக்குயரமாக வைத்துப்படுத்திருந்த சுட்ட செங்கற்கள் எல்லாம் தங்கக் கட்டிகளாக, இறைவனது திருவருளினல் பெற்றுர்.

3. திருப்பாச்சிலாச்சிரமத்திலும், திருவோண காந்தன்றளியிலும், இவர் பொன் வேண்டிப் பரமசிவத்தின் மேல் பதிகம் ஓதி, பொற்குவை பெற்றனர்.

4. திருமுதுகுன்றம் என்னும் விருத்தாசலத்தில், சிவபெருமான் திருவருளாற் பெற்ற பொன் முழுவதையும், அங்குள்ள மணிமுத்தாற்றில் போட்டுவிட்டு, திருவாரூரிலுள்ள கமலாலயத் திருக்குளத்தில்மூழ்கி குறைவின்றி எடுத்துக் கொண்டார்.

5. திருக்குருகாவூருக்கு அருகில் சிவபெருமான் அந்தணக் கோலத்துடன் வந்து கொடுத்த பொதிச் சோற்றைப் பெற்று உண்டார்.

6. திருவையாற்றைத் தெரிசிக்கச் செல்லும் பொழுது, காவிரியாற்று நீர் பெருகித் தடை செய்ய, பதிகம் பாடி நீரோட்டத்தைத் தடை செய்து நிறுத்தி, ஆற்றைக் கடந்து சென்றுர்.

7. திருப்புக்கொளியூர் அவிநாசியில், ஐந்தாண்டுப் பருவத்தில் முதலையால் உண்ணப் பெற்று மாண்ட அந்தணச் சிறுவனை, இரண்டாண்டுகள் சென்ற பிறகு ஏழாண்டுச் சிறுவனுக, அதே முதலை வாயிலிருந்து வரும்படி அழைத்துக் கொடுத்தருளினுர்.

8. இவர் திருமணத்தில் செய்து கொண்ட சபதத்தைத் தவறி சங்கிலியாரைப் பிரிந்து திருவொற்றியூர் எல்லையைத் தாண்டியவுடன் இரண்டு கண்களும் தெரியாமல் குருடாயினர்.

பின்பு சிலர் கையைப் பற்றிக் கொண்டு வெண்பாக்கம் சென்று சிவனைத் துதிக்க, இவருக்கு அத் தலத்தில் பரமசிவன் ஊன்று கோல் அளித்தனர். அதைக் கொண்டு கச்சி ஏகம்பம் சென்று கடவுளைத்துதிக்க, அவ்விடத்தில் இடக்கண் தெரியப் பெற்றனர். திருவாரூரில் வந்து வலது கண்ணும் தெரியப் பெற்றனர்.

9. இவர் பரமசிவனைத் தூத னுப்பியது தகாத காரியமென்று, திருப்பெருமங்கலத்திலிருந்து ஏயர்கோன் கலிக்காம நாயனர் இவர்மேல் கோபங் கொண்டு இருத்தலை அறிந்த பரமசிவன், கலிக்காம நாயனருக்குச் சூலை நோய் உண்டாக்கி, அது சுந்தர ராலன்றித் தீராது என்று அவருக் குச் சொல்ல, அவர் சுந்தரரால் அந்நோயை நிவர்த்தித்துக் கொள்ள உடன்படாதிருந்தும், பரமசிவன் சுந்தரரை அவ ரிடம் அனுப்ப, சுந்தரர் வருவதை அறிந்து கலிக் காம நாயனர் உடைவாளினல் தன் வயிற்றைக் கிழித்துக் கொண்டு இறந்துகிடக்க, அதைப் பார்த்து சுந்தரரும் தன் வயிற் றைக் கிழித்துக் கொள்ள எத் தனிக்கையில், பரமசிவன் கலிக் காம நாயனரை உயிர்ப்பித்தனர். உடனே இருவரும் ஒருவரை யொருவர் வணங்கி மகிழ்ந்தனர்.

10. திருநாகைக்காரோணத்தில் இவர் பரமசிவன்மேல் பதிகம் பாடி, பொன்னும், நவரத்தின மும், ஆபரணங்களும், வஸ்திரங் களும், குதிரைகளும், உடை வாளும் பெற்றனர்,

11. சேரமான் பெருமாள் நாய னரால் இவருக்குக் கொடுக்கப் பெற்ற திரவியத்தை, வரும் வழி யில் சிவபூதகணங்களாகிய கள் ளர்கள் பறித்துக் கொள்ளவே, திருமுருகன் பூண்டியில் சுவாமி மேல் பதிகம்பாடி, அத்திர வியத்தை மீண்டும் பெற்றனர்.

12. திருவஞ்சைக் களத்தில், சிவ பெருமானை வேண்டிக் கயிலாயத் திலிருந்து வந்த வெள்ளை யானை யின் மீது ஏறி, தேவரும் மூவரும் எதிர்கொண்டழைக்கத் திருக்கயி லாயத்தை அடைந்து பதிகம் பாடி, அப்பதிகம் நிலவுலகிற்கு வந்து வழங்கும்படி செய்தருளி னர்.

மணிவாசகப் பெருமான்

மாணிக்கவாசகரது தீந்தமிழ்ப் பாடல்கள்,

சிவபெருமானைத் திருவருள் சுரக்கச் செய்து, நரிகளைக் குதிரை களாகவும், அவரையே அக் குதிரைகளுக்குத் தலைவராகவும் வருமாறு செய்தன.

அன்று இரவே அக்குதிரைகள் எல்லாம் திரும்பவும் நரிகள் ஆகி விட, மன்னன் மாணிக்கவாச கரை ஆற்றின் சுடுமணலில் நிறுத் தித் துன்புறுத்தியதற்கு இரங்கி, வைகை ஆறு வெள்ளப் பெருக் கெடுக்கச் செய்தன.

பக்தியில் சிறந்த வந்தி என்னும் பிட்டு வாணிச்சிக்காகச் சிவ

பிரானைக் கூலியாளாக வந்து மண்சுமக்கச் செய்தன.

மன்னன், கூலியாளாக வந்த இறைவனது முதுகில் அடித்த அடி, மக்களனைவர் முதுகிலும் படும்படி செய்தன.

இவையேயன்றி, கீழே கண்ட செயற்கரிய செயல்களையும் செய் திருக்கின்றன.

1. ஈழநாட்டு மன்னனொரு வனின் ஊமை மகளைப் பேசும்படி செய்ததுமன்றி, அவனைக் கொண்டே சைவசமயத்தில் பிறருக்குள்ள சந்தேகங்களைத் தான் கேட்க, அவற்றிற்குப் பதி லுரைக்கும்படி செய்தருளினர்.

2. சைவசமயத்தை இகழ்ந்து பேசிய ஈழநாட்டுப் புத்த சமயத் தவரை ஊமைகளாகும்படி செய் தார்.

3. தில்லைத் திருப்பதியில், கனகசபையின் முன்னே, "திரு வாசகத்திற்குப் பொருள் சிற் றம்பலவனே" என்று சுட்டிக் காட்டிப் பூதவுடலை ஒடுக்கிச் சிவ மானர்.

# நாம் ஏன் கடவுளை வணங்க வேண்டும்?

மாணவ மணிகளே!

உலகில் உள்ள எந்த ஒரு மனிதனும், அவன் எவ்வளவு தான் பெரியவனுயிருந்தாலும், அவன் எல்லாம் வல்லவன் அல்ல; எல்லாம் அறிந்தவன் அல்ல.

எல்லாம் வல்லவனும், எல்லாம் அறிந்தவனுமான ஒருவன் உண்டு என்றால், அவன் இறைவனைத் தவிர வேறு எவனுமே அல்லன். மனிதராய்ப் பிறந்த எல்லோரும், சிறிய அறிவும் சிறிய ஆற்றலுமே படைத்தவர்களாக இருக்கிறோம்.

இந்தச் சிறிய அறிவையும் சிறிய ஆற்றலையும் வைத்துக் கொண்டு, பரந்து விரிந்த இந்தப் பெரிய உலகில் நாம் வாழ வேண்டியதிருக்கிறது.

அப்படி வாழும்போது, நாம் சிறிதும் எதிர்பாராத பல இன்னல்களையும் இடையூறுகளையும் அவ்வப்போது சந்திக்க நேரு கிறது.

நமது முயற்சிகள் பல தோல்வியடைகின்றன. நாம் போடுகிற பல திட்டங்கள் நிறைவேறுமல்போய் விடுகின்றன. நாம் நினைப் பதற்கு மாறுகப் பல நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

நாம் நண்பர்கள் என்று நினைத்தவர்கள், சந்தர்ப்ப வசத்தால் பகைவர்களாக மாறுகிறுர்கள். நாம் நல்லவர்கள் என்று நினைத் தவர்கள், சூழ்நிலையின் காரணமாய்க் கெட்டவர்களாக மாறு கிறுர்கள். நமக்கு இன்பத்தைத் தரும் என்று எண்ணிச் செய்த காரியம், பிற்பாடு துன்பத்தைத் தருவதாய் மாறுகிறது.

இம்மாதிரி நிகழ்ச்சிகளால், நாம் வாழ்க்கையில் அடிக்கடி ஏமாற்றங்களுக்கு ஆளாகிறோம். நம் உள்ளம் வேதனையில் மூழ்கு கிறது. நமக்கு உற்றவர்களாய் உள்ளவர்களே நம்மீது குற்றம் சாட்டிப் பேசுகிறுர்கள். அதுவே நமக்கு மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் அதிகமான துன்பத்தைத் தருவதாய் இருக்கிறது.

இந்தத் துன்பங்களுக்கெல்லாம் ஆளாகாமல் இருப்பதற்கே, நாம் எப்போதும் ஆசைப்படுகிறோம். ஆனால், அது நம்மால் இயலவில்லை. அந்த இயலாமைக்குக் காரணம் என்ன? நாம் சிற்றறிவும் அற்ப ஆற்றலும் உடையவர்களாய் இருப்பதே அதற்குக் காரணம் ஆகும்.

எனவே, நம்முடைய துன்பங்கள் நீங்க வேண்டுமானால், நம்முடைய முயற்சிகள் வெற்றியடைய வேண்டுமானால், வாழ்க்கையில் நாம் கொண்டுள்ள குறிக்கோள்கள் நிறைவேற வேண்டுமானால், பேரறிவும் பேராற்றலும் வாய்ந்த ஒரு பெரியவரின் துணையை நாம் பெற்றுக் கொள்ளவேண்டும். அத்தகைய பெரியவர், இறைவனைத்தவிர வேறு எவருமே இலர் என்பதை, நாம் ஏற்கெனவே அறிந்துள்ளோம்.

ஆனால், இறைவனது துணையை எப்படிப் பெறுவது என்கிறீர்களா?

நம்முடைய உண்மையான நண்பர்கள் நம்மிடத்தில் உள்ளன்பு பூண்டவர்களாயிருப்பார்கள்.

நண்பர்களைக் காட்டிலும், நமது உடன் பிறந்தவர்கள் அதிகமான உள்ளன்பு கொண்டவர்களாய் இருக்கலாம்.

உடன் பிறந்தவர்களைக் காட்டிலும், நம்மை ஈன்றெடுத்த தாய் தந்தையர் மிகுதியான உள்ளன்பு உடையவர்களாய் இருப்பார்கள்.

அந்தத் தாய் தந்தையரைக் காட்டிலும் நம்மிடத்தே மிகமிக அதிகமான அன்பு படைத்தவன் ஆண்டவன்!

ஆண்டவனது அன்புக்கு அளவே கிடையாது. அவன் நம்மிடத்தில் கொண்டுள்ள கருணைக்கு, ஓர் எல்லையே இல்லை. அதனால்தான், அவனை நாம் அன்பின் வடிவம் என்கிறோம். கருணைக்கடல் என்கிறோம்.

"இறைவா! அன்பின் வடிவமே! கருணைக்கடலே! எனக்கு நீ துணை புரிவாயாக!" என்று நாம் மனம் உருகிப் பிரார்த்திக்க வேண்டும். அப்படிப் பிரார்த்தித்துவிட்டு நாம் ஒரு நன் முயற்சியைத் தொடங்குவோமானால், அந்த முயற்சி நமக்குக் கட்டாயம் கைகூடும். நமக்கு வெற்றிகள் கிட்டும்.

ஆகையால், இன்று முதல் இறைவனை நாம் உளமார வழிபடுவோமாக! அவனை வழிபட்டுவிட்டு, அதன் பிறகு நாம் எந்தக் காரியத்தையும் தொடங்குவோமாக!

# விக்ரக ஆராதனை

## பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர்

மண்ணினுல் செய்த ஒரு பழத்தை யாகிலும் யானையையாகிலும் பார்த்தால், உண்மையான பழமும் உண்மையான யானையும் நம்முடைய கவனத்திற்கு வருகின்றன. அப்படியே நாம் தொழுகிற விக்ரகங்களும், உருவமில்லாதவரும் சாஸ்வதமுமாயுள்ள ஈஸ்வரனை நம்முடைய கவனத்துக்குக் கொண்டுவருகின்றன.

வங்காள தேசத்தில் பிரம்ம சமாஜத்திற்குத் தலைவராக இருந்தவரும், விக்கிரக ஆராதனையை நிக்ரகித்தவருமான கேசவ சந்திர ஸேனர் என்பவரைப் பார்த்து, ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொன்னதாவது :—

இந்த விக்ரகங்களை நீர் பார்த்தால் உம்முடைய மனத்தில் கல், மண், கட்டை, புல் ஆகிய இந்த எண்ணங்கள் ஏன் தோன்றுகின்றன? இந்த உருவங்களில் அறிவு மயமாயும், ஆனந்தமயமாயும், அழியாத தன்மையாயுமுள்ள ஜகன்மாதா பிரசன்னமா யிருக்கிருள் என்கிற உணர்ச்சி உமக்கேன் உண்டாகக்கூடாது?

ஒரு மனிதன், தான் தொழும் ஈஸ்வர விக்ரகமும் தேவி விக்ரகமும், வாஸ்தவத்தில் தெய்விகத் தன்மையுடையன என்னும் திட சித்தத்தைக் கொண்டவனுயிருந்தால், அவன் தெய்விகத் தன்மையை யடைவான். ஆனுல் அவை கல், மண், வைக்கோல் என்று கருதினுல், அவனுக்கு அவைகளைத் தொழுவதினுல் யாதொரு பிரயோஜனமும் இல்லை,

பசுவின்பால் அதன் உடம்பு முழுவதிலும் இரத்த ரூபமாய் வியாபித்திருக்கிறது. அப்படியிருந்தபோதிலும், பசுவின் காதுகளையாகிலும் அல்லது கொம்புகளையாகிலும் கசக்கிப் பிழிவதால் பால் கிடைக்குமா? முலைக்காம்புகளின் வழியாகக் கறந்தால்தான் பால் கிடைக்கும்.

அதுபோல, கடவுள் பிரபஞ்ச முழுவதிலும் வியாபித்திருக்கிருர். அப்படி யிருந்தும், அவரை எல்லாவிடத்தும் உன்னுல் தரிசிக்க முடியாது. பூர்வம் பக்தர்கள் அனுஷ்டித்து வந்த பக்தியின் ஆவி நிரம்பியுள்ள பரிசுத்த ஆலயங்களில்தான், ஈஸ்வரன் அதிக சுலபமாய் தரிசனம் கொடுக்கிருர்.

ஒரு சமயத்தில் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் தமது சிஷ்யர் ஒருவரிடத்தில் சொன்னதாவது:— களிமண்ணுல் செய்த விக்ரகங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தாய். அதுவும் அவசியமாய்த் தோன்றுகிற காலமும் நேரிடும். ஒருவன் ஆத்ம நிலையை யடையாமுன் பல மனே நிலைகளை ஒன்றன்பின் ஒன்ருய் அடைவான். மனிதர்களுக்குப் பற்பல மனேநிலைகள் உண்டாகும். இப்படிப் பலவேறு நிலைகளிலிருக்கும் மனிதர்களுக்குப் பொருந்தும்படியாகப் பல விதமான ஆராதனை மார்க்கங்கள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.



# தாய்மையின் தெய்விகத் தன்மை

ஸ்ரீ வி. ஜி. பன்னீர்தாஸ்



கடவுளை நாம் கண்ணால் காண முடியாது என்று சொல்லுகிறார்கள். அது ஓர் அறியாத்தனமான பேச்சு. நம்மை ஈன்று வளர்த்த அன்னையின் வடிவத்திலே, கடவுள் அல்லும் பகலும் நம் கண் முன்னே காட்சியளித்துக் கொண்டிருக்கிறார். அதைப் புரிந்து கொள்ளாமல், கடவுளை நாம் வேறு எங்கெங்கேயோ போய்த் தேடியலைந்து திண்டாடுகிறோம்!

உலகில் நமக்கு எத்தனையோ நண்பர்கள் இருக்கிறார்கள். உற்றார் உறவினர் இருக்கிறார்கள். மனைவி மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் அத்தனை பேரும் நம்மிடத்தில் அன்பு செலுத்துகிறார்கள்.

ஆனால் அந்த அன்பையெல்லாம், கைம்மாறு கருதாத அன்பு என்று சொல்லிவிட முடியாது. காரணம், அவர்களுக்கு நாம் ஏதோ ஒருவகையில் பயன்படுபவர்களாய் இருக்கிறோம் என்பதனாலேயே, அவர்கள் நம்பால் அன்புடையவர்களாக இருக்கிறார்கள்.

அன்னையின் அன்பு, அத்தகைய பயன் கருதும் அன்பல்ல. நம் அன்னைக்கு நாம் எந்தவகையிலும் பயனுடையவர்கள் அல்லர் என்று ஆகிவிட்டாலும், அவளுக்கு நம் பால் உள்ள அன்பு குன்றாது. எனவேதான், அதனைக் கைம்மாறு கருதாத அன்பு என்று சொல்லு கிறோம்.

அதுமட்டும் அல்ல. நம் அறி யாமையின் காரணமாக நமது அன்னையினிடத்தே நாம் பகைமை கொண்டு அவளுக்குத்துன்பங்களை இழைத்தாலும்கூட,நம்மீதுஅவள் வைத்திருக்கும் உள்ளன்பு அணு வளவும் குறைவுபடாது. அத் தகைய குன்றாத அன்பின் வடிவ மாக, இறைவனே நம் அன்னை யின் உள்ளத்தில் நின்று நமக்கு அருள் பாலிக்கிறார்.

ஆகையால், அந்த இறைவனை நாம் வேறு எங்கேயும் போய்த் தேடவேண்டியதில்லை. நம்தாயின் வடிவத்திலேயே நாம் கடவுளை வழிபடலாம். வழிபட்டு அவரது திருவருளைப் பெறலாம்.

நம் தாயின் உள்ளத்தை நாம் குளிரச் செய்யும் போது, இறை வனது உள்ளம் தானாகவே குளிர்ச்சியடைகிறது. "மகனே நீ வாழ்க!" என்று அன்னை தன் உளம்கனிந்து ஆசிகூறுவாளாயின், அந்த ஆசியுரையை ஆண்டவன் அப்படியே பலிதம் ஆக்கிவைக் கிறார்.

இந்த உண்மையைத் தம் வாழ்க்கையில் அனுபவித்துப் பார்த்தவர்கள் எண்ணற்ற பேர் இருக்கிறார்கள். அவர்களில் அடியேனும் ஒருவன். நான் ஒன்று மட்டும் உறுதியாகச் சொல்லுகிறேன்: தாயின் மனங் கோணாமல் நடந்து கொண்டு வந்தால், அந்த மகனுடைய வாழ்க்கை உயர்ந்து கொண்டே வரும்! தாயின் மகிழ்ச்சியையே நம் குறிக்கோளாகக் கொள்வோ மானால், நம்முடைய மகிழ்ச்சி யையே இறைவன் தன்னுடைய குறிக்கோளாகக் கொள்கிறான்.

ஆகையால், நாமெல்லாம் தாயை வணங்கித் தரணியிலே உயர்வடைவோமாக!



ஆசிரியரும் வெளியிடுபவரும் : T. ராமனுதன் 4, தணிகாசலம் செட்டிரோடு, சென்னை-17. அச்சிடுபவர்: கொண்டா. காசி சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர் சென்னை-17.